உ

ஸ்ரீ குருப்யோ நமஃ

ஹரஹர சங்கர! ஜய ஜய சங்கர!!

# திருக்கோவில் வழிபாடு



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேதஸபா

திருவல்லிக்கேணி, சென்னை – 600 005.

1977] [ஞானயக்ஞம்

ஓம்
திருச்சிற்றம்பலம்

# திருக்கோவில் வழிபாடு

க. திருஎல்லை :

திருக்கோவில் திருக்காபுரம் நம் கண்ணில் தோன்றும் இடம் திருஎல்லை ஆகும். அங்கு, வரும் திருப்பாட்டை அன்புடன் ஓதிக்கொண்டு நிலமுறப்பணிந்து வணங்குதல் வேண்டும் :

“பல்கு தொண்டர்தங் குழாத்தொடும்
பயின்மறையவர்சூழச் [உடன்வரும்
செல்கதிப்பயன் காண்பவர் போற்களி
சிந்தைகூர் தரக்கண்டு
மல்கு தேவரே முதலனைத் துயிர்களும்
வணங்கிவேண் டினவெல்லாம்
நல்கு தில்லைசூழ் திருஎல்லை பணிந்தனர்
ஞானஆர் அமுதுண்டார்.”

—கஉ. திருஞா - கசஎ.

‘திருஎல்லை’ வணக்கம் என்பது, விழுமிய முழு முதல்வன் வீற்றிருந்தருளும் திருக்கோவில் நான்னெறிச் செல்வர்கள் நாளும் செய்யும் திருவழிபாட்டாலும், திருமுறைத் திருமாமறை ஓதும் சிறப்பாலும் அருள் விளக்கம் மிக்கு ஓங்கி, “உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம் போல்” நெடுந்தொலைவுவரை விரியும். அவ் விளக்க விரிவின் எல்லையே திருஎல்லை ஆகும். ஆகவே அவ்வெல்லையின்கண் திருவருளை நினைந்து விழுந்தெழுந்து தொழுதல் இன்றியமையாததென்க. வேந்தராம் மாந்தராட்சியின் நகர் எல்லைப் புறத்துக் காணப்படும் ஆட்சி அடையாளக்கொடியினை அன்புடன் வணங்குதல் இதற்கு ஒப்பாகும். நான்னெறி: சீலம், நோன்பு, செறிவு, அறிவு.

உ. திருவீதி :

“செல்வ மல்கிய தில்லைமூ தூரினில்
தென்திசைத் திருவாயில்
எல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்குநின்
றெடுக்குமேத் தொலிசூழ
மல்லல் ஆவண மறுகிடை கழிந்துபோய்
மறையவர் நிறைவாழ்க்கைத்
தொல்லை மாளிகை நிறைத்திரு வீதியைத்
தொழுதணைந் தனர்தூயோர்.”

—கஉ. திருஞா - கருகா.

'திருவீதி' நன்னெறிச் செல்வர்கள் மன்னி வாழும் மறுகு ஆகும். ஆண்டவன் அன்பர்பொருட்டு வேண்டும் போதெல்லாம் அகத்தும் புறத்தும், கணவிலும் நனவிலும் அருளுருக்கொண்டு வெளிப்பட்டு அருள்வன். நின்று நிலவும் திருவிழாத் திருவுலா நினைவாலும், 'வீதிவிடங்கர்' என்னும் திருப்பெயர் வழக்காலும் இவ்வுண்மை புலனாகும். மறுகு—தெருவு.

ங. திருக்கோபுரம்:

"மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணங்
கமழ்ந்துவான் துகள்மாறிச்
சிலம்ப லம்புசே வடியவர் பயில்வுறுஞ்
செம்மையால் திருத்தொண்டு
கலந்த அன்பர்தஞ் சிந்தையில் திகழ்திரு
வீதிகண் களிசெய்யப்
புலங்கொள் மைந்தனர் எழுநிலைக் கோபுரம்
பணிந்தெழுந் தனர்போற்றி."

—கஉ. திருஞா - கருஎ.

'திருக்கோபுரம்' இறைவன் திருவடையாளங்கள் மூன்றனுள் ஒன்று. இதனைப் பேரடையாளம் என்ப. இலிங்கம்—அடையாளம். திருக்கோபுரத்தின்கண் தீட்டப்படும் ஓவியங்கள் முழுமுதல்வனின் ஐம்பெருந் தொழிலினையும், உலகத்தோற்றம் நிலைஒடுக்கம் முதலியவற்றையும், மக்கள் தேவர் முதலிய ஆருயிர்களின் செய்கைகளையும், அவர்களுக்கு ஆண்டவனருளிய அருளிப்பாடுகளையும் விளக்குகின்றன. எனவே, இஃது இறையுண்மை காட்டும் ஓவிய இறைநூலாகும். இவ்வுண்மைகளை நினைந்து வணங்குதல் வேண்டும். திருக்கோபுரம்: தூல இலிங்கம்.

ச. திருவாயில்:

"முந்நீர் வலங்கொள் மறைக்காட்டு முதல்வர்
கோவில் சென்றெய்திச்
செந்நீர் வாய்மைத் திருநாவுக் கரசும்
புகலிச் சிவக்கன்றும்
அந்நேர் திறக்க அடைக்களனப் பாடுந்
திருவா யிலையணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய் நாயன்
மாரை நினைந்திறைஞ்சி" —கஉ. சேரமான்-அகா.

'திருவாயில்' புகவும் போதரவும் வழியாகவுள்ள திருவாயிலினை ஆண்டவன் திருக்கோவில் உறுப்பு அனைத்திற்கும் சிறந்ததெனக் கருதி வழிபடுதல்வேண்டும். இனியாரின் சார்புள்ள பொருள்கள் அனைத்தும் அவ் இனியார் போன்றே

காணப்படும் அன்றோ? புகுதல்-உள்நுழைதல். போதரல்-வெளிவரல்.

ரு. திருக்கொடி :

"அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும்
நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருஎழுத்தும்-
நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி."
—மெய்கண். கொடி-ச.

'திருக்கொடி' முழுமுதல்வன் ஆவிப்பொருட்டுச் செய்யும் திருஐந்தொழில்களின் திருவருளுண்மையினைத் திருஐந்தெழுத்தால் விளக்கிக்காட்டுவதாகும். இதனை வணங்குங்கால் முப்பொருள் உண்மையினை நினைதல் வேண்டும்.

சா. திருப்பீடம் :

"கையுந் தலைமிசை புனையஞ் சலியன
கண்ணும் பொழிமழை ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுடன்
உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன் பெழுதரும்
மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர்
ஆர்வம் பெருகுதல் அளவின்றால்."
—கஉ. திருநா - ககாஎ.

'திருப்பீடம்' மெய்யன்பர்கள் 'யான் எனது என்னும் செருக்கினைத்' திருவருளுணர்வால் அகற்றி அணைவிக்கும் இடம். பலிபிடுதல்: ஒப்புவித்தல். கூத்தர் தம் உடை நடை உணர்வை இயற்கைநிலைக் கேகும்கால் ஆசான்பால் ஒப்புவிப்பது போன்றதேஇது. இதன்முன் விழுந்தெழுந்து வணங்குங்கால் விழும்பொழுது சிற்றறிவாண்மை விழுந்தது எனவும், எழுங்கால பேரறிவாண்மை நிறைந்து எழுந்தது எனவும் நினைதல்வேண்டும். கூத்தர்—ஆடுவோர்.

எ. திருவாயில் :

"மூஎயில் செற்றஞான் றுய்ந்த மூவரில்
இருவர் நின் திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
ஒருவ நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த

தேவ தேவரின் திருவடி யடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே."
—எ. ருரு – அ.

'திருவாயில்' முழுமுதல்வனின் மெய்யடியார்களே வாயில் காவலராவர். மூஎயில் - மூன்று கோட்டை, அவை இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய மூன்று பொருள்களா லாகியன. இரும்பு: ஆணவமல காரியம். வெள்ளி: மாயாமல காரியம். பொன்-கன்மமல காரியம். இம் மூன்று கோட்டை களை அழித்தலே முப்புரம் அழித்தல். நற்பண்பும் நல் லொழுக்குமே வாயிற்காவலர். இம்முறையால திருக்கோவில் திருவுருவம் அனைத்தும் தெய்வப் பண்பின் உருவகமே யாகும். இவ்வுண்மை நினைந்து வழி படுதல்வேண்டும்.

அ. பிள்ளையார் :

"எடுக்கு மாக்கதை இனதமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய் திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்."
'பிள்ளையார்' அறிவாற்றல் உருவகமாகும்.
—கஉ. பாயிரம் - ங.

ஆண்டவனுக்குரிய அன்பு, அறிவு, ஆற்றல், இன்பம் என்னும் நால்வகைப் பண்புகளுள் இத்திருவுரு அறிவாற்றற் பண்டா கும். அறிவால் நிகழ்வன பொறியின்பமும் அறிவின்பமுமாம். அறிவு-பேரறிவ. பிள்ளையார்க்குக் கூறும் ஆற்றல்கள் மூன்ற னுள் சித்தி புத்தி என்னும் இருவர் கிளந்தெடுத்துக் கூறப் படுவர். இருகையாலும் நெற்றியிற்குட்டல் (17) நினைவொரு மையைக் குறிக்கும். காது கைப்பற்றல் அருமறை கோடலாம். தோப்புக்கரணம் டணிசெயலைக் குறிக்கும். சித்தி-பேரறிவு. புத்தி–பொறியறிவு.

வினைகடி கணபதி மெல்லடி போற்றி
தண்கட மாமுகத்தான் தாளிணை போற்றி
ஆனை முகத்தான் அடியிணை போற்றி
நுதற்கண் திருவாளன் திருவடி போற்றி
செக்கர் மேனிச் செம்மல் அடிபோற்றி
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனடி போற்றி
முனிவன் சிறுவன் மொய்யடி போற்றி
மணிவண்ணன் மாமருகன் மலரடி போற்றி.



கூ. முருகர் :

"பொருவருஞ் சிறப்பின் மிக்கார்
இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே

அரியதென் றெவருங்கூற அதற்படு
காதலாலே
முருகலர் அலங்கல் செவ்வேல் முருகவேள்
முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன்
நெறியில் நிற்பார்.''
—கஉ. கண் – க௦.

'முருகர்' அன்பாற்றல் உருவகமாகும். அன்பாற்றற் கியைய அருள்நினைவால் ஐம்புலன் வென்ற ஆவிப்பகுதியை மணக்கும் குறிப்பே தெய்வயானை திருமணம் ஆகும். ஐம்புலனுக்குட்பட்டு அருள் நினைவால் ஐம்புலச் சூழலகன்ற ஆவிப்பகுதியை மணப்பதே வள்ளிநாச்சியார் திருமணம். திருமணம்—திருவடிக்கலப்பு. இவ்வுண்மையன்றி இரு மாதரை மணத்தல் எனக்கொள்ளுவது ஏற்புடைத்தன்று. இவ்வுண்மை புலப்படுத்தவே முருகப்பெருமானைச் 'சிவகுருநாதன்' எனச் செப்பினர். சிவனடி சேர்ப்பிக்கும் குருநாதன் என்பது செம்பொருள். கண்ணப்பர் வரலாறு இவ்வுண்மையினைக் காட்டும். கண்ணப்பர் முருகனருளால் தோன்றிக் காளத்தி முதல்வர் திருவடியை மருவினர்.

கடப்ப மலரணியும் கடவுள் போற்றி
மகன்சேந்த ஞகை மன்னியோய் போற்றி
தந்தையருள் முருகவேள் தாளிணைகள்போற்றி
சூரபன் மாவைத் தொலைத்தோய் போற்றி
மயிலூர்தி முருகவேள் மலரடி போற்றி
ஆல்கெழு கடவுட் புதல்வ போற்றி
வெற்றி வெல்போர்க் கொற்றவ போற்றி
வேல்கெழு தடக்கை விழுமியோய் போற்றி.

க௦. காவல் நந்தி:

''நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர்
நீறணி மேனியர் அனேகர்
பெற்றமேல் கொண்ட தம்பிரான் அடியார்
பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார்
மற்றவர்க் கெல்லாம் தலைமையாம் பணியும்
மலர்க்கையிற் சுரிகையும் பிரம்பும்
கற்றைவார் சடையான் அருளினாற் பெற்றான்
காப்பதக் கயிலைமால் வரைதான்.''
—கஉ. திருமலை - கக.

'காவல் நந்தி' திருக்கோபுரவாயிலின் அடுத்த திருவாயிலின்கண் ஆனேற்றுமுகமும் அடியவர் மெய்யுமாகக் காட்சி அளிக்கும் கடவுளர். இவரை வழிபட்டு இவர்தம்

திருவாணைபெற்றுத் திருமுன் செல்லுதல்வேண்டும். இவரை அதிகார நந்தி எனவும் அழைப்பர். ஆனேற்று முகமெனல் அருட்பண்பறிகுறி. திருமுன்–சந்நிதானம்.

நெற்றியிற் கண்ணர் நிறையடி போற்றி
நாற்பெரும் தோளர் நற்றாள் போற்றி
நீறணி மேனியர் நெடுந்தாள் போற்றி
தலைமைப் பணியர் தாளிணை போற்றி
மலர்க்கையிற் சுரிகையர் மலரடி போற்றி
கயிலை மால்வரைக் காவலோய் போற்றி
பெரிய தேவரெனும் பெயரோய் போற்றி
வானவர்க் கருளிப்பாடு வழங்கினோய் போற்றி.

கக. திருவடியார் :

"தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா வீரத்தார் எல்லார்க்கும் தனித்தனிவே றடியேனென்று ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம் அருள்செய்தார்''

—கஉ. தடுத் – உ0க

'திருவடியார்' திருக்கோவில் மூன்றும் சுற்றின்கண் தென்முகச் செல்வர் திருமுன்னும், அம்மையப்பபிள்ளையின் அருள்வலப்பாலும் காணப்படுவர். இவர்கள் திருத்தொண்டத் தொகைச் செல்வர்களும், சேக்கிழார் மெய்கண்டார் உள்ளிட்ட சீர்சால் அடியருமாவர். இவர்களே திருவடிப் புணையாம் தெப்பத்தினைச் செலுத்தும் செல்வர்.

பெருமையால் தம்மையொப்பார் பெருந்திரு
அடிகள் போற்றி
பேணலால் சிவத்தைப்பெற்றார் பெய்கழல் போற்றி
ஒருமையால் உலகைவெல்வார் ஒண்மல
ரடிகள் போற்றி
அருமையாம் நிலையில்நின்றார் அடியிணை போற்றி
அன்பினால் இன்பம்ஆர்வார் அடியிணை போற்றி
இருமையும் கடந்துநின்றார் இணையடி போற்றி
மெய்ப்பத்தர் பரிவுடையார் மெல்லடி போற்றி
திருக்கூட்டம் தொழுதெழுவார் சேவடிகள் போற்றி

கஉ. ஆலமர் செல்வன் :

"ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த அங்கணனை
நூலின்கண் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது
புறம்போந்தார்

சீலம்கொள் தென்னவனும் தேவியரும்
உடன்போத."

—கஉ. திருஞா - அஅங.

'ஆலமர்செல்வன்' உலகியற் கல்வியும், வீட்டியற் கல்வியும் 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்' முதல் ஆசானுய் எழுந்தருளி அறவோர்க்கும் துறவோர்க்கும் அறிவுறுத்தியருள்வன். அந்நிலையே ஆலமர்செல்வன் ஆகும். இத்திருவுருவும் அறிவாற்றற் பண்பேயாம்.

ஆலின்கீழ் நால்வர்க்குஅன்று அறமுரைத்தாய
போற்றி
அறிவார்க்கு நூலிந்த அண்ணலடி போற்றி
ஆலமர் செல்வன் அடியிணை போற்றி
தென்முகத் தெய்வத் திருவடி போற்றி
நுதல்விழி நாட்டத் திறைபோய் போற்றி
கண்ணழலாற் காமர்க் கடந்தோய் போற்றி
அறம் பொருள் இன்பம்வீடு அருளினுய் போற்றி
அந்தணர்க்கு மொழிந்தவாய் ஆசான் போற்றி

1. 'சுழிந்த கங்கை.' க. ருங — கா.

கங. அம்மை :

"ஓங்காரி என்பாள் அவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே இனிதிருந் தாளே."

—கo. கOஎங.

'அம்மை' ஆண்டானின் ஆற்றற் பண்பாவள். 'தலையிலா ஞானமே வடிவம்.' அருந்தவத்தால் அம்மையை மகளாகப் பெறுவதென்னும் உருவகம் ஞானம் பெறுதலையே உணர்த்தும். அம்மகவினைச் சிவபெருமானுக்கு மணத்தாலளிப்பதென்பது பெற்ற சிவஞானத்தை அச்சிவபெருமான் திருவடிக்கண் ஒப்புவிப்பதே.

ஏடங்கை நங்கை இணையடிகள் போற்றி
இறைஎங்கள் முக்கண்ணி எழிலடிகள் போற்றி
வேடம் படிகத்தள் மென்மலர்த்தாள் போற்றி
அங்கைவெண் டாமரை அம்மையடி போற்றி
பாடும் திருமுறைப் பார்ப்பதிதாள் போற்றி
திரிபுரை சுந்தரி அந்தரிதாள் போற்றி
பரிபுரை நாரணி பாதங்கள் போற்றி
செம்பட்டுத் தானுடைச் செல்வியடி போற்றி.

கச. கூத்தப்பெருமான் :

"கற்பனை கடந்த சோதி கருணையே உருவம் ஆகி
அற்புதக் கோலம் நீடிஅருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பரவியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி
போற்றி."

— கஉ. தில்லை - உ.

'கூத்தப்பெருமான்' இன்பப் பண்பினனுவன். ஆவிப் பொருட்டு எட்டும் இரண்டும் (ய) உருவான அவ் ஆவிக்கண் திருஐந்தெழுத்தால் ஐந்தொழில் திருக் கூத்தாற்றுவன். விழுமிய முழுமுதல் மெய்ம்மை வலியுறுத்துவது இத் திருக்கூத்தே.

நகரமாய் விளங்கும் நற்றுள் போற்றி
மகரமாய் விளங்கும் வயிற்றேய் போற்றி
சிகரமாய் விளங்கும் திருத்தோள் போற்றி
வகரமாய் விளங்கும் மலர்முகம் போற்றி
யகரமாய் விளங்கும் எழின்முடி போற்றி
தில்லைமன் றுடும் திருவடி போற்றி
அம்மைகாண ஆற்றும் அருள்நடம் போற்றி
பொற்புடன் நடஞ்செய் பூங்கழல் போற்றி.

கரு. சிவக்கொழுந்து:

"காணுத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணுகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்
நாணுது நேடியமால் நான்முகனும் காண நடுச்
சேணுரும் தழற்பிழம்பாய்த் தோன்றியது
தெளிந்தாராய்."

— கஉ. சாக் — அ.

'சிவக்கொழுந்து' முப்பிழம்புண்மை யுணர்த்தும் முழுப பிழம்பு. பிழம்பு - உருவம். முப்பிழம்பு – அருவம், அருஉருவம். உருவம். தொன்மைத் தமிழகத் தனிமுதல் வணக்கம் இச்சிவ வணக்கமே, இது செந்தீப்பிழம்பின் திரு அடையாள மாகும். இதன்கண் இடமாயிருப்பது ஆற்றல் எனவும், வல்மா யியங்குவது சிவம் எனவும் வழங்குகின்றேம். இவற்றையே அன்னை அத்தனுகவும் நம் முன்னேர் நமக்கு அருளினர். பெண் ஆண் எனப்பேசுவதும் இப்பிழம்பினையே. இத்திருவுரு நிற்கும் நிலையே கருவூலம். கருவூலம்-முதலிடம். சிவக்கொழுந்து-சதாசிவம்.

1 "எல்லாம் சிவன்என்ன நின்றுய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி

கொல்லார் மழுவாள் படையாய் போற்றி
கொல்லும்கூற் றொன்றை உதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக்கு அரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி."

1. 'சங்கரனே' கா. ௫௨ - கா — கா. ௫. க.

கக. ஊர்தி நந்தி:

"உள்ளுந் தகைமை இனிப்பிறவே றுளவே
உழைமான் மறிக்கன்று
துள்ளுங் கரத்தார் அணிபணியின் சுடர்சூழ்
மணிகள் சுரநதிநீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கள்தம் பிராட்டி
யுடனே சேரமிசைக்
கொள்ளும் சினமால் விடைத்தேவர்கு லமன்
றேவிச் சுரபிகுலம்." — க௨. சண்—௨௨.

'ஊர்திநந்தி' ஆனேறு. அருளறப் பண்பே ஆனேருகும். ஆன்பால் மக்கட்குத் தாய்ப்பால போன்று நலந்தருகின்றது. நிறையுறை உணவும் பாலே. "விடுநில மருங்கில் படுபுல்லார்ந்து, நெடுநில மருங்கின் மக்கட்கெல்லாம், பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால், அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந் தூட்டும்,'' தகையது. அத்தகைய மனப்பான்மை வாய்ந்து பிறர்க்கென வாழும் பெரியோரே முதல்வன் திருவடிகீழ் இன்புறும் எழிற்செல்வராவர். செல்வம் எனப் பொருள்தரும் மாடு என்னும் சொல் ஆனினங்கட்கு அமைந்திருப்பதும் நோக்குக. அடியுறைவே அவற்கு ஊர்தி யெனக் கூறும் உருவக வுள்ளுறை. உறை – உயிராற்றல். (Vitamin)

விடைஏறி விழைந்தேறும் வெல்விடையே போற்றி
எங்கள்பரமன் இயைந்தேறும் எழிற்பசுவே போற்றி
மேலாம் பெருமை விடையே போற்றி
தீர்த்தங்கள் எல்லாம்சேர் திறல்விடையே போற்றி
திருமஞ்சனமாம ஐந்தளிக்கும் சீர்விடையே போற்றி
திருநீறு முதலளிக்கும் திண்விடையே போற்றி
பிராட்டிபெம்மான் ஊர்ந்து வரும் பெருவிடையே
போற்றி
முனிவர்கணம் சூழ்உடல்சேர் மூப்புவிடை போற்றி.

கஎ. அம்மையப்ப பிள்ளை :

“ செல்வியைப் பாகம் கொண்டார் சேந்தனை
மகனைக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு மாமலர்க்
கொன்றை சூடிக்
கல்வியைக் கரையிலாத காஞ்சிமா
நகர்தன் உள்ளால்
எல்லியை விளங்க நின்றார் இலங்குமேல்
தளிய னாரே.” —ச. சங் - அ.

'அம்மையப்பபிள்ளை' ஆற்றல் அறிவு அன்பென்னும் மும்மைப் பண்பின் திருவுரு. இந்நிலையே இல்நிலை. அறிவு பிள்ளையார், அன்பு முருகர், ஆற்றல் வைரவர். இவையே அருள் ஆவியுடன் இயைந்தியக்கும் புறநிலை. அருள் அம்மை வடிவாய் நின்று ஆவியுடன் இயைந்தியக்கும் நிலை அகநிலை. இல்நிலை - குடும்பநிலை.

“ வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி
கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி
குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்புமவர்க் கரும்பொருளே போற்றி போற்றி
நால்வேத மாறங்க மானாய் போற்றி
செம்பொனே மரகதமே மணியே1 போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.”
—கா. நஉ. - எ.

---

1. செம்பொன்: அப்பர். மரகதம்: அம்மை. மணி: பிள்ளை.

கஅ. சண்டேசுரர் :

“ அண்டர் பிரானும் தொண்டர்தமக் கதிபன்
ஆக்கி அனைத்துநாம்
உண்ட கலமும் உடுப்பனவும் சூடு
வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம் என்றங்
கவர்பொன் தடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை
வாங்கிச் சூட்டினார்.” —கஉ. சண்டே - ருகா.

'சண்டேசுரர்' சிவபூசையின் சிறப்புணர்த்திய செல்வர். 'எரிபெருக்குவார்க்கு அவ்வெரி ஈசன துருவருக்கமென்ப துணர்த்திய ஒண்மையர். சிவபூசைக்குத் தடைசெய்த தந்தையின் தாளற வீசிய செம்மல். அரனார் மகனாராகத் திகழும் அரும்பெருந்திருவினர். 'தொண்டர்தமக்கு அதிபனும்'

நிலையினர். அவர் வழியாகவே சிவ வழிபாட்டின் செழும் பயனை நாம் பெறுதல்கூடும். அஃது ஆண்டவன் ஆணை. களிப்பின் அடையாளம் கைகொட்டுதல். சிவ வழிபாட்டின் பயனை வேண்டி வழிபடுதலின் களிப்பே கைகொட்டுதல். பிள்ளையார் குட்டுடன் (9) தொடங்கிச் சண்டேசர் கொட்டுடன் முடிவது முழு வழிபாடு.

ஆவின் பெருமை அறைந்தார் அடிபோற்றி
நிரைகாக்க வந்தார் நிறைமலர்த்தாள் போற்றி
திருமேனி சிவாலயம் செய்தமைத்தார் தாள்போற்றி
முன்னைச்செய் சிவபூசை முற்றுவித்தார் தாள்போற்றி
தந்தைதாள் வீசிய சண்டேசர் தாள்போற்றி
தொண்டர்க் கதிபனும் தூயோன் தாள்போற்றி
அரனார் மகனாராய் அமர்ந்தோன் அடிபோற்றி
களிப்புக்கை கொட்டுதலைக் காண்போன்
அடிபோற்றி.

கசு. வயிரவன் :

"அஞ்சு வான்கரத் தாறிழி மதத்தோர் ஆனை நிற்க
அனையிருள் திரியும் [வும்
மஞ்சு நீள்வது போலுமா மேனிமலர்ப்ப தங்களில்
வண்சிலம் பொலிப்ப
நஞ்சு பில்கெயிற் றரவவெற் றரையின் நாம
படையுடைப் பிள்ளை (மூன் றிலைப்
எஞ்சலின் றிமுன் திரியவுங்குன்ற மெறிந்தவேலவன்
காக்கவும் இசையும்." —கஉ. திருக்குறிப்—அகஉ

'வயிரவன்' புறநிலை ஆற்றலருள். திருக்கோவில் சூழ் காவலர். தேவர் செருக்கறும் செம்மலார். உடையுணராக் காலத்தும் உயிர்செய் வழிபாட்டின் உண்மை உணர்த்தும் உருவினர். காடுறை வாழ்க்கைக் காட்சியர்.

மஞ்சுநீள் மேனி வயிரவர்தாள் போற்றி
வண்சிலம்பொலிக்கும் மலர்ப்பதங்கள் போற்றி
அரவவெற் றரையின் அண்ணலடி போற்றி
சூல கபாலித் துணைவன்தாள் போற்றி
தமருக பாசம்கொள் தலைவனடி போற்றி
சிரம்வாள் கைக்கொள் செல்வனடி போற்றி
சாந்து சவ்வாது புழுகணிவோன் தாள்போற்றி.
அருளாதி வயிரவன் அடியிணை போற்றி.

உ௦. அகவழிபாடு

“ சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு
திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே
றிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா
என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி
இனித்தான் நல்காயே.” —அ. கோயில்—கூ.

“ சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.” —க௦. உளகக.

‘அகவழிபாடு’ தேனிப்பென்பதாகும். தேன் இனிமை போலும் இனிமையை உணர்விற் கொள்ளுதல். தேனிப்பைத் தியானிப்பு எனக்கூறுவர். திருக்கோவில் வழிபாடு செய்து திரும்புங்கால் கொடிமர முற்றத்து வடக்கு நோக்கி நிமிர்ந்திருந்து ‘சிவசிவ’ என்னும் திருமுறைத் திருமாமறையினைக் “காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி” உள்ளத்துணர்வினில் ஒல்லும் வகை ஓதுதல். இயன்றளவு அஞ்செழுத்துக் கணித்தலுமாகும்.

உக. ஒப்புவித்தல் :

“ யாதே செய்தும் யாமலோம் நீஎன்னில்
ஆதே ஏயும் அளவில் பெருமையான்
மாதே வாகிய வாய்மூர் மருவினர்.
போதே என்றும் புகுந்ததும் பொய்கொலோ.”

—ரு. ருO - கா.

‘ஒப்புவித்தல்’ செய்ந்நன்றி அறிதலாகிய உண்மை உணர்வு. உண்மை கட்டு வீடு இரண்டிலும் ஆவிகள் முழுமுதல்வனின் அடிமை. முழுமுதல்வன் என்றும் ஆண்டானே. இவ்வுண்மை உணர்ந்தவர் திருக்கோவில் வழிபாடு முதல் எல்லாச் செயல்களும் ஆண்டவன் அருட்செயலே என்று கொண்டு அவன்பால் ஒப்புவித்து அவன் அடி நினைவு ஒன்றே கொண்டு இன்புறுவர். இஃது உழுவித்து உண்பார் பால் உழுதுண்பான் விளைவித்துக்கொடுத்து உண் மகிழ் தலை ஒக்கும்.

உஉ. நாவின்கிழத்தி:

“ ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்புவெண் தாமரை

பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள்
சூடுமின் சென்னிவாய்த் தோத்திரம் சொல்லுமே."

—கo—கoகாஎ.

நாவின்கிழத்தி - கலைமகள்.

முக்கண்ணியம்மை உமையவளாகும். அவள் தம் திருவருள் ஆற்றல் மூவகைப்படும் அவை, அன்பு, அறிவு, ஆற்றல்கள என்பன. அவற்றுள் அறிவாற்றல் நாவின் கிழத்தி ஆகும். நாவின் கிழத்தியைச் 'சரச்சுவதி' என்பர். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

" காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடு சரச்சு வதியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே."

—ரு. உஉ—அ.

கற்பாரும், கற்பிப்பாரும், கற்றுவல்லாரும், நாவலர், பாவலர், புலவர், சான்றோர்களும் நாவின்கிழத்தியை நாளும் வழிபடுதல்வேண்டும். நாவின்கிழத்தி வெண்ணிறத்தள்.

ஏடங்கை நங்கை இறைவியடி போற்றி
வேடம் படிகத்து மெல்லியல் தாள்போற்றி
வெண்தா மரையமர் மேதையள் அடிபோற்றி
பாடும் திருமுறை பார்ப்பதி பதம்போற்றி
சரச்சுவதி என்னும் தையலடி போற்றி
கலைமகள் நூபுரக் கன்னியடி போற்றி
தவஞ்செயும்தூய்நெறித் தமிழ்த்தாயடிபோற்றி
நிலைபெற நெஞ்சில் நிறைந்தாள் அடிபோற்றி.

உங. பூவின்கிழத்தி :

" கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே."

—கo. கoருஅ.

பூவின்கிழத்தி — அலர்மகள், திருமகள்.

முக்கண்ணியின் ஆற்றலருள் அலர்மகளாகும். அலர் மகள் செந்நிறத்தள். தீதின்றிப் பொருள் தேடுவார் அனைவர்களும் பூவின்கிழத்தியைப் பொற்புடன் வழிபடுதல்வேண்டும். பொருளே அருளற இன்பங்கட்குப் பெரிதும் துணையாவது. "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னான் முடியும்," என்பது திருமுறைத் திருமாமறை.

ஓவாது உழைத்து உறுபொருள் தேடுதல்வேண்டும். தேடிய பொருளால் இல்லாண்மையாக்கி நல்லாண்மைத் திருபெயர் நாட்டுதல்வேண்டும். உழைக்கவேண்டும்; உண்பிக்கவேண்டும்; உண்ணுதல்வேண்டும்; இவையே பெருங் கடன். அலர்மகள் என்னும் குறிப்பு வருமாறு :

" அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்பவர்
மலர்மலி குழலுமை தனையிட மகிழ்பவர்
நலமலி உருவுடை யவர்நகர் மிகுபுகழ்
நிலமலி மிழலையை நினையவ லவரே."

—க. கஉச—க.

கொம்பனை யாள்தம் குளிர்மலர்த்தாள் போற்றி
மங்கைதன் மாண்பொருள் மலரடி போற்றி
வம்பவிழ் கோதை வளரடி போற்றி
வானவர் நாடும் வள்ளியடி போற்றி
செம்பவளத் திருமேனிச் சிவையடி போற்றி
நம்பிஎன் உள்ளம் நயந்தா ளடிபோற்றி
அலர்மகள் மலிபொலி அருளடி போற்றி
மலர்மலி குழலுமை மாணடி போற்றி.

உச. சேவின்கிழத்தி:

" குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட அரத்த நிறமன்னு கோலத்தள்
கண்டிகை ஆரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே."

—க0. க0ருO.

சண்டிகை - கொற்றவை; செயமகள்; துர்க்கை.

மூக்கண்ணியின் அன்பாற்றல் சேவின்கிழத்தி ஆகும், அன்பாற்றலே இன்பினை நல்கியருள்வது. இன்பினுட் சிறந்து விளங்குவது துன்பமகற்றி நுகர்விக்கும் இன்பமே. அத்தகைய இன்பை அருள்வது வடக்கு வாய்ச் செல்வியாகிய கொற்றவையே. கொற்றவை செயல் காட்சியில் கொடுமைபோற் காணப்படினும் மற்றது அன்பின் அடிப்படையேயாம். இதுவே 'மறத்திற்கும் அன்பே துணை' என்னும் வள்ளுவப் பயனின் வாய்மையாகும். இதனை நிகழ்வதே நிறைபுகழாகும், இதுவே பொருள் சேர் புகழ். இதுவே இருளகற்றி ஒளியேற்றி வாழ்விக்கும் ஒப்பில் திருவருள். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

" நறைமலி தருமள ருடுமுகை நகுமலர்
புகைமிகு வளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும்
வழிபடும் அடியவர்

குறைவில பதமணை தரவருள் குணமுடை
இறையுறை வனபதி
சிறைபுன லமர்சிவ புரமது நினைபவர்
செயமகள் தலைவரே.'' —க. உக—ச.

**செயமகள் தலைவரே:** செயமகள் திருவருளால் ஞான வாளேந்தி மாயப் படைவென்று தூய சிவனடிதோயும் தலைமையரே. இத்திருப்பாட்டுப் பூசைமுறையும் குறிப்பது.

[இச்செயமகள் நிலையினை இளங்கோ அடிகள் கூறும் இயன்முறைமை காண்க:

"ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்
ரு வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரிய திரி கோட்டுக் கலைமிசைமேல் நின்றாயால்
அரியரன்பூ மேலோன் அகமலர்மேல் மன்னும்
விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்
சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்தி
செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால்
கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை யுருவாய் மறையேத்த வேநிற்பாய்.
—சிலப். கஉ, வேட்டுவவரி.

**ஆணவம்:** இன்ன தன்மைத்தென ஒருவராலும் சொல்வொணாப் பேரிருள். **ஆணவ ஆக்கம்:** எருமை. **ஆணவச் சார்பாம் மாயை ஆக்கம்**—தூவாமாயை: காராளை. **அருட் சார்பாம் மாயை ஆக்கம்**—தூமாயை: வெள்ளானை. **இருவினை ஆக்கம்:** கோளரி. **செறிவுநிலை—யோகம்:** பாய்மா. இத்தகைய உருவகங்களான் ஆருயிர்களின் மனப்பண்பே முகம் என உருவகிக்கப்பட்டது. இப்பொழுதும் ஒருவர்தம் கொடுநிலை கண்டு அவர்தம் முகத்தைக் குரங்கு முதலிய விலங்கின் முகங்கட்கு ஒப்பிடுவதும் காண்க.

குண்டலக் காதின் குணத்தள் அடிபோற்றி
கொலைவிற் புருவத்துக் கோமாட்டி அடிபோற்றி
அரத்த நிறமன்னும் அம்மையடி போற்றி
செம்மைக் கோலத்துச் சிவையின் அடிபோற்றி
கண்டிகை பூண்ட கன்னியடி போற்றி
ஆரங் கதிர்முடி அம்மையடி போற்றி
மாமதிக் கண்ணி மங்கையடி போற்றி
சண்டிகைப் பெயர்சேர் தாயினடி போற்றி.

உரு. விடைபெறுதல்:

"வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம்
விண்ணவர் எண்ணிலார் மற்றும்
காதலான் மிடைந்த முகற்பெருந் தடையாம்
கதிர்மணிக் கோபுரத் துள்ளான்
பூதவே தாளப் பெருங்கண நாதர் போற்றிடப்
பொதுவில்நின் ருடும்
நாதனர் ஆதி தேவனர் கோவில் நாயகன்
நந்தியெம் பெருமான்."

—கஉ. திருமலை—கo.

திருக்கோபுர வாயிலின் திருமுன் மண்டபம் விடைபெறு மண்டபம் என்று பெயர்பெறும். இதனை அனுப்பு மண்டபம் எனவும் கூறுப. திருக்கோவில் செல்லும் மெய்யடியார்கள் என்றே அழைக்கப்படுவர். இது கல்லூரியின்கண் கற்கலுறு வாரும் கற்பாரும் கற்று வல்லாரும் மாணவரென்றே பெயர் பெறுவதனை ஒக்கும். திருக்கோவிலின்கண் புக்குக் காதலால் கைகூப்பி வணங்கிக் கண்ணுதற்கடவுள் திருவடி எய்துதற்குக் காவல் நந்தியங்கடவுள் திருவடி வணங்கி அவர்தம் திருஆணை பெற்றுப் புகுதரல்வேண்டும். அங்ஙனம் புகும் அன்பர்களை அவர்தம் ஆணைவழி நிற்கும் தொண்டர்கள் உடனழைத்துச் சென்று ஒவ்வொன்றினையும் விளங்கக் கட்டுரைத்துத் தொழு விப்பர். தொழுது மீள்வார் முன்போலவே திருவாணை பெற்று மீளுதல்வேண்டும். அப்பொழுதும் தொண்டர்கள் உடன் வருவர். அவர்கள்பால் விடைபெறுதலே இவ்விடை பெறுதல் என்க. அதன் அறி குறியாக இம்மண்டபத்தின்கண் சற்று அமர்ந்து வணங்கி எழுதல்வேண்டும். இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் தள்ளரும் உள்ளத்துக்கொள்ளும் கள்ளமில் நிகழ்ச்சிகள் என்க. இம்முறையே புறத்துத் திருக்கோவிற் பணியாளர் 'முகனமர்ந்து இன்சொல் வழங்கி' உடன்வந்து விடைதருதல் வேண்டும். இம்முறைப் பணியாளர் நம் திருக் கோவில்களில் இன்றியமையாது இடம்பெறுதல் வேண்டும். அந்நாளே செந்நெறி சிறக்கும் பொன்னாளென்க.

சிவனடி மறவாத் திருத்தொண்டர் தாள்போற்றி
அவனடி அணையும் அன்பர் அடிபோற்றி.

வாழ்த்து:

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதுஎல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக மும்துயர் தீர்கவே."

திருச்சிற்றம்பலம்.